7th February 1959]

(c) The Government have dropped the proposal for the present.

* 110 *Q.*—

DEPUTY SPEAKER : The hon. Member Sri Veluchamy is not in his seat. The question and answer will be printed in the official proceedings.

SRI T. VELUCHAMI : கனம் ஸ்தல-ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தென்காசி முனிசிபாலிட்டி எதிர்ப்பு கமிட்டியார் தென்காசியை முனிசிபாலிட்டியாக ஆக்கக்கூடாது என்று மனுப்போட்டார்களா ?

(ஆ) அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Yes, Sir.

(*b*) The Government have dropped the proposal for the present.

*Sirkali Panchayat*

* 111 *Q.*—SRI C. MUTHIAH : கனம் ஸ்தல-ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சட்டப்படி தேவையுள்ள ஜனத்தொகையும், நிதி வசதியும் இருந்தும் சீர்காழி பஞ்சாயத்தை நகர சபையாக மாற்றுவதற்கு அனுமதிக்காத காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : As the Sirkali Panchayat is not in favour of the conversion of the area into a Municipality, the proposal has been dropped by the Government.

SRI C. MUTHIAH : பஞ்சாயத் வருமானம் ஒரு லட்சத்தி பதினயிர ரூபாயாக இருந்தும், ஜனத்தொகை 22 ஆயிரத்திற்கு மேல் இருந்தும் சீர்காழி பஞ்சாயத்துக்கு ஏன் இன்னும் இந்த பாக்கியம் கிட்டவில்லை ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : சீர்காழி பஞ்சாயத்தின் விருப்பமின்மையே இதற்குக் காரணம்.

*Community Development Scheme*

* 112 *Q.*—SRI C. MUTHIAH : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சமுதாய நலத் திட்டக் கால வரம்பை அதிகமாக்க உத்தரவு போடப்பட்டதா ?

(ஆ) அப்படியானல் எவ்வளவு காலம் ?

(இ) அதிகப்படியாய் ஒதுக்கப்பட்டுள்ள தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The Community Development Programme was previously implemented in three stages of three years duration each, namely, pre-intensive, intensive and post-intensive. These three stages have now been abolished and have been replaced by two stages, namely, Stage I and Stage II of five years duration each. The date for the coverage of the whole State by National Extension Service has been extended up to the third year of the Third Plan.

[7th February 1959

(c) Each Stage I Block is eligible for a financial allotment of Rs. 12 lakhs and each Stage II Block for a financial allotment of Rs. 5 lakhs. Previously, the aggregate financial content of a block during the pre-intensive and intensive stage was Rs. 12 lakhs whilst during the post intensive stage, an annual provision of Rs. 30,000 for works and schemes and Rs. 33,000 for staff was made.

**Sri C. Muthiah** : சமுதாய நலத் திட்ட ப்ளாக்குகள், C.D. ப்ளாக்ஸ், N.E.S. ப்ளாக்ஸ், ரிவெர்டெட் N.E.S. ப்ளாக்ஸ் என்று மூன்று பிரிவுகள் இருக்கின்றன. இவைகளில் இரண்டு பிரிவுகளுக்கு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஒரு பிரிவிற்கு பணம் ஒதுக்கப்படவில்லை. அந்தப் பிரிவிற்கு எப்போது பணம் ஒதுக்கப்படும்? அந்தப் பிரிவில் எப்போது வேலைகள் ஆரம்பிக்கப்படும்?

**The Hon. Sri C. Subramaniam** : முடிவடைந்த பிளாக்கு களைப்பற்றி தற்போது புனராலோசனை செய்ய முடியாது. பாக்கி இருக்கும் ப்ளாக்குகளைப் பொறுத்தவரையில், அவைகளுக்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவைகளுக்கெல்லாம் இனி வரும் பட்ஜெட்டுகளில் பணம் ஒதுக்கலாம்.

DEPUTY SPEAKER : With the permission of the House, I will take five minutes more and finish the rest of the questions.

*113 Q.—**Sri C. Muthiah** : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சமுதாய நலத் திட்டப்பகுதியில் மேஜர் (II Grade) பஞ்சாயத்துக் களைச் சேர்க்க உத்தேசமுண்டா?

**The Hon. Sri C. Subramaniam** : That question does not arise as all the Panchayats within a Block are eligible for the benefit of the Community Development Programme.

**Sri A. Govindasamy** : சில மேஜர் பஞ்சாயத்துக்கள் கம்யூனிடி டெவலப்மெண்ட் ப்ளாக்குகளாக எடுத்துக் கொள்ளப்பட்டும், சில மேஜர் பஞ்சாயத்துக்கள் அத்தகைய ப்ளாக்குகளாக எடுத்துக் கொள்ளப்படாமலும் இருக்கின்றன. உதாரணமாக வளவனூர் பஞ்சாயத்து இத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. அதை இத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ள அரசாங்கம் முயற்சிக்குமா?

**The Hon. Sri C. Subramaniam** : இப்போதுள்ள உத்தரவுப் பிரகாரம், எல்லாப் பஞ்சாயத்துக்களையும் இத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ள முடியும்.

### *Epidemic diseases*

*114 Q.—**Sri P. G. Manickam** : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) நகரங்களிலும், கிராமங்களிலும் ரோடுகளின் ஓரங்களிலே திறந்த வெளியிலே பலகாரங்கள், மிட்டாய்கள், பானங்கள் போன்ற சாப்பிடக்கூடிய பொருள்களை விற்பதன் மூலம் காலரா, சீதபேதி போன்ற பெருவாரியான வியாதிகள் உண்டாகின்றனவென்று சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

(ஆ) அவ்வாறு சர்க்காரின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டிருப் பின், எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகளின் விவரங்கள் யாவை?